உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்

# பரிமேலழகருரைச் சந்தேகவினா அசந்தேகம்.

இஃது, அறிவினா முதலிய வாறனுளைய வினாவன்றாம் ஆமெனின் அஃததி வியாத்தியேயாம் என்னை உத்தர வேதவுரை யோத்துடையர் “கடவுள் வாழ்த்து மூவர்க்கும் பொதுப்படக் கூறினார்" என்பதுஉம் இஃதொப்ப தாகலான் “அவருரையே வாசிரியர் கருத்தாயின் முக்கடவுள் வாழ்த்தெனக் கிளந்ததி காரித் தலைமையும் அன்றிக் கவிக் கூற்றாய அதிகாரத்து முக் கடவுளெனக் கிளவாது கடவுள் வாழ்த்தெனப் பொதுப்பட வதிகாரித்தல் கவிக்கமையா தென்க.” என இவ்வாறு அவர் தம் பரிமேலழகருரைச் சந்தேகவினா ஆண்டு நிகழுமாகாலான் இஃது இவ்வாறே இஃதொக்கு மேனைய வற்றினு முய்த்துக் கொண்டுணரப்படும். ஆகலின் நியாய நூற்கும் உத்தரவேதவுரை யோத்துடையர் கருத்திற்கும் மாறுகொள வினாயினார் போலக் காணப்படுகின்றது. அஃதஃதன்று கடவுள் வாழ்த்திரண்டனுள் இஃதேற்புடைக்கடவுள் வாழ்த்து ஆகலின் அது முக்கடவுட்கும் பொது வென ஏது வோதினர் ஆகலின் ஆண்ட திவியர்த்தி யாகாதா லெனின் அஃ தன்று அஃதொப்பவீண்டும் அறிவறிந்த வென்னு மேதுப் பற்றிப் பெண்ணொழித்ததென்றாராகலின். ஆகலான் அஃத திவியாத்தி யாகாமை யாண்டைய தென்றொழிக அதுநிற்க. இனி இத்திருமுகமுடையர் பெருகாது சுருங்கவுரைக்க வென் றலின் அங்ஙன முரைக்குதும் அவ்வினா வுடையர் புதல்வரென்பது ஆண் பெண் இருபாற் பொதுப்பெய ரென்றார் அஃதே லாது ஏலு மெனின் “குறுமக்கள் மகார் சிறாரே கூறுப இவர் தம் பன்மை" என்னும் நிகண்டு நூற்கு மாறுகொளக் கூறலாய் முடியும் ஆகலான். அவரெடுத்துக் கொண்ட வேது போலியாதன் மேலும் பிரதிஞ்ஞா வானியாதலுங் காண்க. ஆண்மகாரை சுட்டும் புதல்வனென்பதூஉம் பெண்மகாரைச் சுட்டும் புதல்வியென்தூஉம் தம்முள் வேறெனக் கொள்க. அல்லாக்கால் தேவன் தேவி யென்னும் வேற்றுமையின்றாம் தேவன் தேவியென்ன பன்மைச் செய்கைப்படுங்கால் முறையே தேவர், தேவியர் என்ருமென்ப தெல்லார்க்கு மொக்கும், அஃதொப்பப் புதல்வன் புதல்வி யெனவும் முறையே புதல்வர் புதல்வியரெனவே செய்கைப்படு மல்லது அவை தம்முள். பொது மொழியாகா புத்திரன் புத்திரி' யென்பன வொப்ப அவை தம்முள் சிறப்பு மொழிகளேயாம். அல்லாக்கால் புத்திர பொன்பதூஉம் பொது மொழியாகல்வேண்டும் ஆகலால் புதல்வரென்பது இருபாற் பொது வென்பதே லாது. ஆகலான் எமதிவ்வோத் தென்னுங் கல்லெறிக்கஞ்சி அவர் தஞ் சந்தேகவினா சிறுவரையேனும் நின்றாற்றமாட்டா தோடியொதுங்கும் ஆகலின் “பரிமேலழகருரைச் சந்தேகவினா" வென்பது அசந்தேகமாய் வினாவன்றாம் ஆகலான் இஃதித் துணையினொழி தலைமையுமாயினும் இன்னுமொன்றோதி. அத்துணையினமைதும் ஆசிரியர் பரிமேலழகனார் “இருபிறப்பாளர் மூவரென் றுரைக்கும் பின் னோத்து மேலுரைப் பாயிரத்துள்", "வருணந் தோறு மென்றுரைக்கு முன் னோத்தோடு முரணு" மென்றார் அஃதங்கன முரணாது வேதமோது மதிகாரம் இருபிறப்பாளர் மூவர்க்கல்லது

பிறர்க்கில்லை யென்பது வேத நூற்கும் அதனையுள்ளவா றுணர்ந் துணர்த்து மாசிரியர்யார்க்கு மொப்ப முடிந்தது சிவாகம தீக்காதி காரமுடைய நால்வருணத்தாருக்குமே அத்தீக்கை யொழுக்க முரிய தல்லது பிறர்க்கின்மை யெங்ஙனம் அங்ஙனமே வேதமோது மதிகாரமுடைய இருபிறப்பாளர் மூவர்க்குமே அவ்வேத வொழுக்க முரியதல்லது பிறர்க்கின்மையறிக. ஆகலான். உரைப்பாயிரத்துள் வருணந்தோறு மென்றது அவ்வேத மோது மதிகாரமுடைய இருபிறப்பாளா, மூவரையுமே சுட்டுமல்லது பிறர்க்குச் செல்லாமையின் இருபிறப்பாளர் மூவரென்னும் பின்னோத்தோடு வருணந்தோ அ மென்னு முன்னோத்து முரணாமையறிக. முரணுமாயின் ஆகமத்துள் வருணந்தோ துமுள்ள தீக்கையொழுக்கம் என் முன்னோதி யொழிந்து பின் தீக்கை யொழுக்கமுடையர் நால்வருணத்தாரெனின் முன் வருணந்தோறு மெனப்பொதுமையி னோதினும் ஆகம தீக்கை யொழுக்கம் நால் வருணத் தர்க்கல்லது பிறர்க்கின்மையின்' ஆகம தீக்கை யென்னுங் குறிப்பு மொழி ஆகம தீக்கைக் குரியரல்லரை யொழித்து நால்வருணத்தார்க்குஞ் சிறப்பாத லொப்ப ஆண்டு வேதவொழுக்கம் என்னுங் குறிப்புமொழி பற்றி வருணந்தோறு மென்பது வேதவொழுக்கத்திற் குரியரல்லரை யொழித்து அவ்வொழுக்கத்திற்குரிய இருபிருப்பாளர் மூவரையே யுணர்த்தலின் முரணி ன்மை யறிக. ஆகலான் எல்லாஞ் சமஞ்சசமேயாம் "சமன்செய்து' சான்றீர்காள் மனக்கோட்டம் விட்டு நுண்ணுணர்வானோக்கிச் சந்தேகவினாவுடையர் தமதையும் அசந்தேக அவினாவுடைய எமதையும் சீர்தூக்கியுரைமின் யாமீண் டெடுத்துரைத்தவாறே உண்மையேது வெடுத்துக் காட்டுக்கள் பற்றி இப்பிரதிஞ்ஞாவானியெனச் சாதிப்பின் யாமதனையுடம்பட்டுக்கோட ஒரு தலையேயாம்.

இனி "வருவிருந்து வைகலுமோம்புவான்" "முகனமர்ந்து நல்விருந் தோம்புவான்" என்னுந் தொடக்கம்பற்றி பெண்ணின்றி உலகியலாய வில்லறம் கடைபோதலின் பெண்ணின்றி உலகியலாய இல்லறங் கடை போகாமையானும் பெண்பெறுதலும் உலகினுக்கு இன்றி யமையாச் சிறப்புடைமை யாதலானும் அதனையுரைக்க வேண்டு மதிகாரம் வேறின்மையானும் அஃதுரை யன்மையென விடுதல் அமையுமோ" வென்னு மையம் ஐயமின் மையறிக. ஆதலால் அவர் தாம் "முன்னும் பின்னும் முரனெனத்" துணிந்து பின்னுரைத்த முரண்மொழியும், மேல் மாறுகொளவுரைத்தார் போலக் காணப்படுகின்ற தெனத்துணியாது முன்னுரைத்த மாறுகோள் போலு மென்னுமொழியுமே தம்முள் முன்னும் பின்னும் முரணி அய்யமாவனவன்றி உரையேத்துள் யாதும் யாண்டும் முரணின்மையின் அய்யமின்மை ஒரு தலையேயாம் ஆகலான் அவ்வுரையே உண்மை யெனவும் இவர் சந்தேகம் பொய்மையெனவும் யாதுமையமின்றி இனிதறிக. இஃதிவ்வாறெழுவன எவற்றிற்குமொக்கு அன்ன பிறவு மன்ன.

இங்ஙனம்:

பூ. நா. இராசகோபால பிள்ளை, ஆடூர்.

சித்தாந்தம் - 1916 ஸு - செப்டம்பர் மீ